# திருப்புகழமிர்தம்

கீலக ஆடி



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

உ

முருகா

## திருவண்ணமலையில் ஸ்ரீ அருணகிரிநாதர் திருவிழா
(பதினொன்காவது ஆண்டு)

நாளது கீலக ஆண்டு ஆடி மாதம் 31-ம் தேதி (15-8-1968) வியாழக்கிழமையன்று (சுதந்திர நன்னாளில்) திருவண்ணாமலையில் சிறுத்தொண்டநாயனார் பந்தலில் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் நினைவு விழா நிகழும். அன்பர்கள் அனைவரும் கலந்து கொண்டு அருள் பெறலாம்.

ஸ்ரீ அருணகிரிநாதர் திருவிழாக் குழுவினர்

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் இயற்றியருளிய
ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம்

புதிய பதிப்பு விலை ரூ. 2-50 தபாற் செலவு ரூ. 1-00

## வரப்பெற்றோம்

1. ஆறுமுகனுக்குகந்த ஆறுபடை வீடுகள்

ஆசிரியர்: என். பத்மநாபன், விலை ரூ. 3 50. வெளியிட்டோர்: தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, தியாகராய நகர் சென்னை-17.

2. தொல்காப்பியச் சூத்திர விருத்தி

(விளக்கக் குறிப்புகளுடன்) ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் அருளிச்செய்தது. வெளியிட்டோர்: திருவாவடுதுறை ஆதீனம். (விலை குறிக்கப்படவில்லை)

3. திருவள்ளுவர் கண்ட மறுபிறப்பு உண்மையும் பேரின்பப் பெருவாழ்வும்

மெய்ஞ்ஞானி, ஸ்ரீ குரு ஏகலைவ அடிகள் அருளியது, வெளியிட்டது: சோம இராசரெத்தினம் 190, வடக்குவீதி. திருநள்ளாறு. (விலை குறிக்கப்படவில்லை)

4. தொல்காப்பியச் செய்யுளியல்—இரு சூத்திர விளக்கம்

விளக்கியவர் பூ. கு. குப்புசாமி ராஜா, இராஜபாளையம். வெளியிடுவோர், மணிமேகலை மன்றம் இராஜபாளையம் (விலை குறிக்கப்படவில்லை)

## சந்தா நேயர்களுக்கு

நமது திருப்புகழமிர்த இதழ்கள் மாதா மாதம் ஆங்கிலத் தேதி 16 அளவில் தபாலில் சேர்க்கப்படுகின்றன. நன்கு சரி பார்த்த பின்னரே தபாலில் சேர்க்கப்படுவதால் இவ்விடம் தவறு நேர இடமில்லை. ஆகவே தபால் இலாகாவில் ஏற்படும் குறை காரணமாக இதழ்கள் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்த ஆங்கில மாதம் 25 தேதி வரை பார்த்திருந்து அது வரை கிடைக்கவில்லையாகில் பின்னரே எமக்கு எழுத வேண்டும். அச்சந்த ஆங்கில மாத முடிவுக்குள் (30 அல்லது 31 தேதிக்குள்) தெரிவிக்காத அன்பர்கள் பின்னர் இதழ் ஒன்றுக்கு 35 காசுகள் வீதம் செலுத்தியே பெறலாம் குறிப்பிட்ட அளவு பிரதிகளே அச்சிடப்படுவதால் பிரதிகள் கைவசம் இருப்பதை அநுசரித்தே அனுப்பிவைக்கப்படும். ஆங்கில மாதம் 25 தேதிக்குள் பிரதிகள் கிடைக்க வில்லையென்று எழுதினால்கவனிக்கப் படமாட்டாது. அடிக்கடி இதழ்கள் கிடைக்கப் பெறாத நிலையில் உள்ளவர்கள் அந்தந்த வட்டார தபால் அதிகாரிகளுக்கு எழுதி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

உ

ஓம் குஹாய நம



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஞூ—ஆடி மீ ஜுலை 1968 | இதழ் 4

## திருப்புகழ்

### திருவானைக்கா

காவிப் பூவை யேவை யிகல்வன
நீலத் தால கால நிகர்வன
காதிப் போக போக மருள்வன இருதோடார்
காதிற் காதி மோதி யுழல்கண
மாயத் தார்கள் தேக பரிசன
காமக் ரோத லோப மதமிவை சிதையாத

பாவிக் காயு வாயு வலம்வர
லாலிப் பார்கள் போத கருமவு
பாயத் தான ஞான நெறிதனை யினிமேலன்
பாலெக் காக யோக ஜபதப
நேசித் தார வார பரிபுர
பாதத் தாளு மாறு திருவுள நினையாதோ

கூவிக் கோழி வாழி யெனமயி
லாலித் தால கால மெனவுயர்
கூளிச் சேனை வான மிசைதனில் விளையாடக்

*1345—1*

கோரத் தீர சூர னுடைவினை
பாறச் சீற லேன பதிதனை
கோலக் கால மாக அமர்செய்த வடிவேலா
ஆவிச் சேல்கள் பூக மடலிள
பாளைத் தாறு கூறு படவுய
ராலைச் சோலை மேலை வயலியி லுறைவோனே
ஆசைத் தோகை மார்க ளிசையுட
னாடிப் பாடி நாடி வருதிரு
ஆனைக் காவில் மேவி யருளிய பெருமாளே.

## பதவுரை

கோழி கூவி வாழி என=கோழியானது கூவி 'வாழி' என்று வாழ்த்தவும். மயில் ஆலித்து=மயில் ஆரவாரம் புரிந்து, ஆல காலம் என உயர்=ஆலகால விஷம் போல் உயர்ந்து விளங்கவும், கூளி சேனை=பூத கணச் சேனைகள், வான மிசை தனில் விளையாட= ஆகாயத்தில் மகிழ்ச்சியுடன் விளையாடவும், கோர தீர சூரனுடை வினை பாற=அச்சந் தருபவனும் தீரனுமான சூரபன்மனுடைய கொடுமைகள் சிந்தி ஒழியவும், சீறல் ஏனபதிதனை=பெருங் கோபத் துடன் வந்த ஆதிவராகம், கோலகாலமாக=கோலாகலமாகக் கூக் குரலிட்டு அடங்கவும், அமர் செய்த=போர்புரிந்த, வடிவேலா= கூரிய வேலாயுதத்தையுடையவரே! ஆவி சேல்கள்=குளத்தில் உள்ள சேல்மீன்கள், பூகம்=பாக்குமரத்தின், மடல் இள பாளைதாறு கூறு பட=ஏடுகளாகிய இளம் பாளைகளின் குலைகள் பிளவுபடும்படி, உயர் ஆலை=உயர்ந்த ஆலைக்கரும்புகளும், சோலை=சோலைகளும் நிறைந்த, மேலை வயலியில் உறைவோனே=மேலைவயலூரில் வீற்றிருப்பவரே! ஆசை தோகைமார்கள்=அன்புடைய பெண்கள், இசையுடன் ஆடி பாடி நாடிவரும்=ஆடியும் பாடியும் நாடியும் வந்து வணங்குகின்ற திரு ஆனைக்காவில்=திருவானைக்கா என்னுந் திருத்தலத்தில், மேவி அருளிய=விருப்புடன் எழுந்தருளியிருக்கும், பெருமாளே=பெரு மையில் சிறந்தவரே! காவிபூவை=கருங்குவளை மலருடனும், ஏவை= அம்புடனும், இகல்வன=மாறுபடுவனவும், நீலத்து ஆல காலம் நிகர்வன=கரிய ஆலகால நஞ்சினை ஒத்தனவும், காதி=கொல்லுந் தகைவனவாயும், போகம் மோகம் அருள்வன=இன்பத்தையும் ஆசை மயக்கத்தையும் கொடுப்பனவும், இருதோடு ஆர் காதில்= இரண்டு தோடுகளை அணிந்துள்ள காதுகளை, காதி மோதி உழல் கண=வெட்டுவன போல் நீண்டு மோதுகின்றனவும் ஆகிய கண் களைக்கொண்டு, மாயத்தார்கள்=மாயம் செய்பவர்களாகிய பொது மாதர்களின், தேகபரிசன=உடம்பைத் தொடுவதற்குள்ள, காமம்=

ஆசை, க்ரோதம்=கோபம், லோபம்=ஈயாமை, மதம் இவை= செருக்கு. என்ற இவைகள், சிதையாத=அழிவு படாத, பாவிக்கு= பாவியாகிய அடியேனுக்கு, ஆயு வாயு வலம் வர=ஆயுளும் பிராண வாயுவும் வலிமை வரும்படி, லாலிப்பார்கள்=அன்புவைத்துக் காப்பாற்றுபவருடைய, போத கரும உபாயத்து ஆன=அறிவுடன் கூடிய தொழில்களின் உபாயத்தைக் காட்டும், ஞான நெறிதனை= ஞானவழியை, இனிமேல்=இனிமேல், அன்பால்=அடியேன் மீது அன்பு கூர்ந்து, லெக்கு ஆக=அந்த வழியே குறியாகக் கொண்டு, யோக ஜபதபம்=யோகம் ஜபம் தவம் இவைகளில், நேசித்து= அன்பு வரும்படிச் செய்து, ஆரவார பரிபுர=பேரொலி செய்யும் சிலம் பணிந்த, பாதத்து ஆளுமாறு=உமது திருவடியில் அடியேனை ஆளும்படி, திருவுளம் நினையாதோ=உமது திருவுள்ளம் நினைந் தருளாதோ?

## பொழிப்புரை

கோழியானது கூவி "வாழி" என்று வாழ்த்தவும், மயில் ஆலித்து ஆலகால விஷம்போல் உயர்ந்து விளங்கவும், பூத கணங்களான சேனைகள் வானத்தில் மகிழ்ச்சியுடன் விளையாடவும், அச்சந் தருபவனும் தைரியமுள்ளவனுமான சூரபன்மனுடைய கொடுமைகள் சிந்தி ஒழியவும், கோபத்துடன் வந்த ஆதிவராகம் கோலாகலமாகக் கூக்குரலிட்டு அடங்கவும் போர் புரிந்த கூரிய வேலாயுதத்தை யுடையவரே! குளத்தில் வாழும் சேல் மீன்கள், கமுக மரத்தின் ஏடுகளாகிய இளம் பாளைகளின் குலைகள் பிளவு படும்படி உயர்ந்து துள்ள, கரும்பாலைகளும் சோலைகளும் நிறைந்துள்ள மேலை வயலூரில் வாழ்பவரே! அன்புடன் பெண்மணிகள் இசையுடன் ஆடியும் பாடியும் நாடியும் வந்து வணங்குகின்ற திருவானைக்காவில் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! கருங்குவளைப் பூவுடனும் அம்புடனும் மாறுபடுவனவும், கரிய ஆலகாலவிடத்தை ஒப்பனவும், கொல்லுந்தகையவாய், இன்பத்தையும் ஆசை மயக்கத்தையும் தருவனவாய், இரு தோடுகளையுடைய காதுகளை வெட்டுவன போல், மோதித் திரியும் கண்களைக் கொண்டு, மாயம் புரிபவர்களாகிய விலை மகளிரது உடம்பைத் தொடுவதற்குள்ள ஆசை குரோதம் உலோபம் செருக்கு என்ற துர்க்குணங்கள் நீங்காத சிறியேனுக்கு, ஆயுளும் பிராண வாயுவும் வலிமை தரும்படி அன்பு வைத்து ஆதரிப்பவர்களின் அறிவுடன் கூடிய தொழில்களின் உபாயத்தைக் காட்டும் ஞான வழியை இனிமேல் என்மீது அன்பு கூர்ந்து, அந்த வழியே இலக்காகக் கொண்டு, யோகம், ஜபம், தவம் இவைகளில் அன்பு வரும்படிச் செய்து, பேரொலி செய்யும் சிலம்பணிந்த தேவரீருடைய திருவடியில் அடியேனை ஆட்கொண்டு, காக்கும்படி உமது திருவுள்ளம் நினைந்து அருளாதோ?

## விரிவுரை

**காவிப்பூவை யேவை யிகல்வன:—**

காவிப்பூ—கருங்குவளை. கருங் குவளை மலர் போன்றன பெண்களின் கண்கள்.

"காவிமலர் புரையுங் கண்ணார்" —சம்பந்தர்.

ஏ—அம்பு பெண்களின் கண்கள் அம்பைப்போல் கூர்மை யானவை. இளைஞருடைய உள்ளத்தில் தைத்துத் துன்புறுத்தும்.

"ஏவினை நேர்விழி மாதரை மேவிய ஏதனை மூடனை" —திருப்புகழ்.

இகல்வன—மாறுபடுவன. கருங்குவளையும் அம்பும் தனக்கு நிகராகாமையால் அவைகளுடன் மாறுபடும் கண்கள் என்றார்.

**நீலத் தாலகால நிகர்வன:—**

கரிய நிறமுடைய ஆலகாலவிடம் போன்றவை அக்கண்கள். நஞ்சு உண்டாரைக் கொல்லுந்தகையது. இக்கண்கள் கண்டாரையுங் கொல்லுந் தகையன.

**காதி:—**

காதுதல்—கொல்லுதல். விலைமாதருடைய கண்கள் மையல் வலைப் பட்டோரை வதைக்குந் தன்மையுடையவை.

**போக மோக மருள்வன:—**

போகம்—இன்பம். மோகம்—ஆசை மயக்கம்.
இந்த இரண்டையுந் தந்து இடர்ப்படுத்துவன அக்கண்கள்.

"காமவிடாய்ப் பட்டார் உயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்கும்
கட்டாரி வேல் விழியார்" —கந்தரலங்காரம்.

"துறந்தோருளத்தை வளைத்துப்பிடித்துப் பதைக்கப் பதைக்க
வதைக்குங் கண்ணார்" —கந்தரலங்காரம்.

**இருதோடார் காதிற் காதி மோதி யுழல்கண:—**

இரு தோடுகளை யணிந்துள்ள காதுவரை நீண்டு, அவைகளுடன் காதி மோதி உழல்கின்ற கண்கள்.

**மாயத்தார்கள்:—**

விலைமகளிர் தமது கண்களைக் கொண்டு ஆடவரை மயங்க வைத்து மாயம் புரிபவர்கள்.

அம்மயக்கத்தால் குபேரன் கோவணாண்டியாவான்; அறிஞன் மூடனாவான். அம்மயக்கமுண்டார்க்கு இரவு பகலாகும்; பகல் இரவாகும்.

**தேகபரிசன காமக்ரோத லோபமதமிவை சிதையாத பாவி :—**

விலைமகளிரது உடம்பைத் தொடுவதற்கு ஆசைப்பட்டு, அதனால் காமக்குரோத லோப மோக மதமாற்சர்யம் என்ற உட்பகை அறுவர்களால் வேதனைப்படுவர். "இவைகள் சிதைவு படாத பாவி" என்கின்றார்.

**ஆயுவாயு வலம் வர லாலிப்பார் :—**

லாலித்தல்—அன்பு வைத்தல். ஆயுளும் பிராண வாயுவும் வலிமையடையுமாறு பெரியோர்கள் அன்பு வைத்துக் காத்தருள் புரிவார்கள்.

**போத கரும வுபாயத்தான ஞானநெறி :—**

பெரியோர்கள் அறிவுடன் கூடிய நற்கருமங்களின் உபாயத்தைக் காட்டும் ஞான வழியைக் கடைப்பிடிக்க வேண்டும்.

**லெக்காக :—**

இலக்கு—குறி. இலக்கு என்ற சொல் லெக்த என மருவியது. ஞான நெறியைக் குறியாகக் கொண்டு அதில் அசைவற நின்று நிலைக்க வேண்டும்.

**யோக ஜபதப நேசித்து :—**

யோகம் :—சித்தத்தைத் தடுத்து ஒருமுகப்பட்டு நிற்றல்.

ஜபம் :—மூலமந்திரத்தை எண்ணிக்கையுடன் உருவேற்றுதல்.

"உருவேறவே ஜெபித்து" —திருப்புகழ்.

தவம் :—மனம் அடங்கிய நிலையில் அசைவற நிற்றல்.

நேசித்து :—நேசிப்பித்து "யோகம் ஜெபம் தவம் இவைகளில் அடியேனுக்கு அன்பு வரும்படிச் செய்து".

**ஆரவார பரிபுர பாதம் :—**

இறைவனுடைய திருவடியில் வேதங்களே சிலம்பாக இருந்து, மந்திர ஒலி செய்து முழங்கும்.

"எழுதரிய மறைச் சிலம்பு கிடந்து புறத்தலம்ப"
—திருவிளையாடல் புராணம்.

**பாதத்தாளுமாறு திருவுள நினையாதோ :—**

"முருகா! அடியேனைக் காமக்ரோத முதலிய உட்பகைகள் சாராது அவைகளை ஒழித்து சான்றோர்கள் காட்டும் அறிவு நெறியில் செலுத்தி, ஜெபதப தியானங்களில் விருப்புறச் செய்து உன் பாதத் தாமரையில் ஆட்கொள்ளுமாறு உன் திருவுள்ளத்தில் சிறிது நினைவு வராதோ?" என்று அருணகிரிப் பெருமான் முருகனிடம் முறையிடுகின்றார்.

**கூவிக்கோழி வாழியென :—**

சூரபன்மனுடன் போர் புரிகின்ற போது, அக்கினி பகவான் முருகவேளின் தேர்மீது சேவற் கொடியாக நின்று "வாழி", "வாழி" என்று கூவினுன்.

"........எரிதழற் பண்ணவன்
வாவு குக்குட மாண்கொடி யாகியே
தேவதேவன் திருநெடுந் தேர்மிசை
மேவி ஆர்த்தனன் அண்டம்வெடிபட" —கந்தபுராணம்.

**மயிலாலித்தால காலமென உயர் :—**

சூரபன்மன் சக்ரவாகப்புள் வடிவந் தாங்கிப் போர்புரிந்த போது. இறைவன் கட்டளைப்படி இந்திரன் மயில் வடிவங் கொண்டு முருகப் பெருமானைத் தாங்கி, ஆலகாலம்போல் சீறிப் போர் புரிந்தனன்.

**கூளிச்சேனை வானமிசைதனில் விளையாட :—**

கூளிச்சேனை—சிவபூதகணங்கள். முருகவேள் சூரபன்மனுடன் போர் புரிந்தபோது, சிவ பூதகணங்கள் மகிழ்ச்சியினுல் விண்ணில் விளையாடின

**கோரந்திர சூரனுடை வினைபாற :—**

கோரமும் தீரமும் படைத்த சூரனுடைய கொடுமைகளாகிய தொழில்கள் சிந்தியழியும்படி முருகவேள் போர்புரிந்தருளினுர்.

பாறுதல்—சிந்தியழிதல்.

"பழவினைகள் பாறும் வண்ணம்" —திருவாசகம்.

**சீறலேன பதிதனை கோலகாலமாக அமர் செய்த :—**

ஏனம்—பன்றி.

"ஒரேனந் தனைத்தேட" —வில்லிபாரதம்.

ஏனபதி—ஆதிவராகம்.

இரணியாட்சன் என்பவன் திதியின் மைந்தன். பேராற்றல் படைத்தவன். அவன் திருமாலைப் பகைத்து, திருமாலின் மனைவியாகிய நிலமகளுக்கு இடர் விளைவிக்கும் பொருட்டு, பூமியைப் பாயாகச் சுருட்டி கடலில் முழுக வைத்தான் பூமிதேவி முறையிட்டாள்; திருமால் வெண்பன்றி யுருவந்தாங்கி, இரணியாட்சனை வதைத்துக், கடலில் முழுகிய பூமியைப் பந்துபோல் தனது கோட்டின் நுனியில் தாங்கி முன்போல் நிறுவினுர். இரணியாட்சனுடைய உதிரத்தைக் குடித்த வெறியினுல் வராகம் செருக்குற்று நிலத்தை நிலைகுலுங்கச் செய்தது சிவபெருமான் அதன் மதத்தை அடக்கத் திருவுளங் கொண்டு முருகவேளை அனுப்பினுர்.

ஆறுமுகக் கடவுள் அந்த ஆதி வராகத்தை எடுத்துச் சுழற்றி அதன் செருக்கையடக்கி, அதன் கொம்பைப் பிடுங்கித் தந்தையிடந் தந்தார்.

அரனுர் அப்பன்றியின் தந்தத்தைத் திருமார்பில் அணிந்தருளினுர்.

அங்கண்மா ஞாலந்தன்னை மேலினி அகழுமோட்டுச்
செங்கண்மால் ஏனயாக்கை எயிற்றையோர் சிறுகைபற்றி
மங்குல்வான் உலகில்சுற்றி மருப்பொன்று வழுத்தவாங்கித்
தங்கள் நாயகற்குச் சாத்தச் சண்முகன் அளிக்கும் என்பர்.

—கந்தபுராணம்.

''உயற்படும் கற்ப மங்கொன்றில் ஏனத்தின்
எயிற்றினைப் பறித்திடுங் குமரன் என்னவே''

—கந்தபுராணம்.

''பன்றியங் கொம்பு கமடம் புயங்கஞ் சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே''

—திருப்புகழ் (மன்றலம்)

''திருமார்பில் ஏனச் செழுமருப்பை நோக்கும்''

—அற்புதத்திருவந்தாதி.

**ஆவிச்சேல்கள் :—**

ஆவி—குளம். குளத்தில் வாழும் சேல் மீன்கள் துள்ளிப் பாக்குக் குலைகள் சிதறும்படி விளையாடுகின்ற நீர்வளம் பொருந்தியது வயலூர்.

**ஆசைத் தோகைமார்களிசையுடன் ஆடிப்பாடி நாடிவரு திருவானைக்கா :—**

அன்புடைய பெண்மணிகள் சிவபெருமானை இசையுடன் ஆடியும் பாடியும் நாடியும் வணங்கும் இனிய திருத்தலம் திருவானைக்கா.

## கருத்துரை

திருவானைக்காவில் வாழுந் திருமுருகா ! உன் திருவடியில் என்னை ஆண்டு கொண்டருளுவாய்.

## திருப்புகழ்

குருதிபு லாலென்பு தோல ரம்புகள்
கிருமிகள் மாலம்பி சீத மண்டிய
குடர்நிணம் ரோமங்கள் மூளையென்பன பொதிகாயக்
குடிலிடை யோரைந்து வேட ரைம்புல
அடவியி லோடுந்து ராசை வஞ்சகர்
கொடியவர் மாபஞ்ச பாதகஞ் செய அதனாலே
சுருதிபு ராணங்க ளாக மம்பகர்
சரியைக்ரி யாவண்டர் பூசை வந்தனை
துதியொடு நாடுந்தி யான மொன்றையு முயலாதே
சமடம தாய்வம்பு மால்கொ ளுந்திய
திமிரரொ டேபந்த மாய்வ ருந்திய
துரிசற ஆநந்த வீடு கண்டிட அருள்வாயே
ஒரு தனி வேல் கொண்டு நீள்க்ர வுஞ்சமும்
நிருதரு மாவுங்க லோல சிந்துவும்
உடைபட மோதுங்கு மார பங்கய கரவீரா
உயர்தவர் மாவும்ப ரான அண்டர்கள்
அடிதொழு தேமன்ப ராவு தொண்டர்கள்
உளமதில் நாளுங்கு லாவி யின்புற வுறைவோனே
கருதிய ஆறங்க வேள்வி யந்தணர்
அரிகரி கோவிந்த கேச வென்றிரு
கழல்தொழு சீரங்க ராச னண்புறு மருகோனே
கமலனு மாகண்ட லாதி யண்டரு
மெமதுபி ரானென்று தாள்வ ணங்கிய
கரிவனம் வாழ்சம்பு நாதர் தந்தருள் பெருமாளே.

### பதவுரை

ஒரு தனி வேல் கொண்டு=ஒப்பற்ற வேலாயுதத்தைக்கொண்டு, நீள் க்ரவுஞ்சமும்=நீண்ட கிரவுஞ்சமலையும், நிருதரும்=அரக்கர்களும், மாவும்=(சூரனாகிய) மாமரமும், கலோல சிந்துவும்=அலை வீசும் கடலும், உடைபட மோதும்=உடைபட்டு அழியுமாறு போர் புரிந்த, குமார=குமாரக் கடவுளே! பங்கயகர வீரா=தாமரை போன்ற திருக்கரங்களையுடைய வீர மூர்த்தியே! உயர் தவர்=

உயர்ந்த தவமுனிவர்கள். மா உம்பர் ஆன அண்டர்கள் = சிறந்த மேலுலகத்தில் உள்ள தேவர்கள், அடி தொழுதே = தேவரீருடைய திருவடியைத் தொழுது, மன்பராவு தொண்டர்கள் = நன்றாகத் துதி செய்யும் அடியார்கள் ஆகியோரது, உளம் அதில் நாளும் குலாவி = உள்ளத்தில் நாள் தோறும் விளையாடி, இன்புற உறைவோனே = அவர்கள் மகிழ்ச்சியடையுமாறு வீற்றிருப்பவரே! கருதிய ஆறு அங்கம் = ஆய்ந்து அறிந்த ஆறு அங்கங்களில் வல்லவரும், வேள்வி அந்தணர் = யாகங்கள் புரிபவருமான அந்தணர்கள், அரி அரி கோவிந்த கேசவ என்று = ஹரி! ஹரி! கோவிந்தா! கேசவா! என்று கூறித்துதி செய்து இரு கழல் தொழு = இரு திருவடிகளிலும்தொழப் படுகின்ற, சீரங்க ராசல் = ஸ்ரீரங்கராஜனுகிய திருமால் நண்பு உறு மருகோனே = அன்பு கொள்ளுந் திருமருகரே! கமலனும் = பிரம்ம தேவனும், ஆகண்டல ஆதி அண்டரும் = இந்திரன் முதலிய இமையவர்களும், எமது பிரான் என்று = எங்கள் தலைவன் என்று கூறி, தாள் வணங்கிய = திருவடியில் வணங்கப் பெற்ற = கரிவனம் வாழ் திருவானைக்காவில் வாழ்கின்ற, சம்பு நாதர் தந்து அருள் = ஜம்புநாதர் பெற்றருளிய, பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! குருதி = உதிரம், புலால் = ஊன், என்பு = எலும்பு, தோல் = தோல், நரம்புகள் = நரம்புகள், கிருமிகள் = புழுக்கள், மால் = காற்று, அம் = நீர், பிசிதம் = இறைச்சி; மண்டிய குடர் = நெருங்கிய குடல், நிணம் = கொழுப்பு, ரோமங்கள் = மயிர்கள், மூளை என்பன = மூளை என்பனவாதிய இவைகள், பொதி காயம் = நிறைந்த உடல் என்னும், குடில் இடை = குடிசையுள், ஓர் ஐந்து வேடர் = மெய்வாய் கண் மூக்கு செவி என்ற ஐம்பொறிகளாகிய வேடர்கள், ஐம்புல அடவியில் ஓடும் = சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலக் கானகத்தில் ஓடுகின்ற, துராசை வஞ்சகர் = கெட்ட ஆசைகொண்ட வஞ்சகர்கள், கொடியவர் = பொல்லாதவர்கள், மாபஞ்ச பாதகம் செய = பெரிய ஐம் பெரும் பாவங்களையும் செய்ய, அதனாலே = அதன் விளைவாக, சுருதி = வேதங்கள், புராணங்கள் = புராணங்கள், ஆகமம் பகர் = ஆகமங்கள் என்ற அறிவு நூல்களால் சொல்லப்படுகின்ற, சரியை = சரியை, க்ரியா = கிரியை, அண்டர் பூசை = தேவர் பூசை, வந்தனை = வழிபாடு, துதியொடு = தோத்திரம், நாடும் த்யானம் ஒன்றையும் முயலாதே = நாடிச் செய்யும் தியானம் முதலியவைகளில் ஒன்றையேனும் முயற்சி செய்து அநுட்டிக்காமல், சுமடமதாய் = அறிவிலியாய், வம்பு = பயனிலாததும், மால் கொளுந்திய = ஆசைகளை எழுப்புவதுமாய, திமிரரொடே = ஆணவ இருள் மூடியவர்களுடன், பந்தமாய் வருந்திய = கூட்டுறவாய் வருந்திய துரிசு அற = குற்றம் தொலைய, ஆனந்த வீடு கண்டிட = பேரின்ப வீட்டை அடியேன் கண்டு உய்யும்படி, அருள்வாயே = திருவருள் புரிவீராக.

## பொழிப்புரை

ஒப்பற்ற வேலாயுதத்தை விடுத்து, நீண்ட கிரவுஞ்ச மலையும், அரக்கர்களும், மாமரமும், அலைவீசுங் கடலும் உடைபட்டு அழியுமாறு போர் புரிந்த குமாரக் கடவுளே! தாமரை போன்ற திருக்கரங்களையுடைய வீரமூர்த்தியே! சிறந்த தவ முனிவர்கள், உயர்ந்த மேலுலக வாசிகளாகிய தேவர்கள், உமது திருவடியைத் தொழுது நன்றாகத் துதி செய்யும் அடியார்கள் ஆகிய இவர்களின் உள்ளத்தில் நாள்தோறும் விளையாடி, அவர்கள் இன்புறுமாறு வீற்றிருப்பவரே! ஆய்ந்து அறிந்த ஆறு அங்கங்களில் வல்லவரும், வேள்வி புரிபவருமாகிய அந்தணர்கள் "ஹரி ஹரி கோவிந்த! கேசவா" என்று துதி செய்து, இரு திருவடிகளை வணங்கப்பெற்ற ஸ்ரீரங்கநாதர் அன்பு கொள்ளும் திருமருகரே! பிரமதேவனும், இந்திராதி இமையவர்களும் எங்கள் தலைவன் என்று திருவடிகளை வணங்கப்பெற்றவரும், திருவானைக்காவில் வாழ்பவருமாகிய சம்புநாதர் பெற்றருளிய பெருமிதமுடையவரே! உதிரம், ஊன், எலும்பு தோல், நரம்புகள், புழுக்கள், காற்று, நீர், இறைச்சி, நெருங்கிய குடல், மயிர்கள், மூளை முதலியன நிறைந்த இந்த உடம்பாகிய குடிசையில் ஐம்பொறிகளாகிய வேடர்கள் ஐம்புலக்காட்டில் ஓடுகின்ற கெட்ட ஆசை கொண்ட வஞ்சகர்கள், பொல்லாதவர்கள், கொடிய பஞ்ச பாதகங்களைச் செய்ய, அதன் விளைவாக, வேதங்கள், புராணங்கள், ஆகமங்கள் என்ற அறிவு நூல்களில் சொல்லப் பெறுகின்ற, சரியை, கிரியை, தேவபூஜை, வழிபாடு, தோத்திரம், ஒருமுகப்பட்ட தியானம் என்ற இவைகளில் ஒன்றையேனும் முயற்சி செய்து மேற்கொள்ளாமல், அறிவிலியாய், பயனில்லாததும், ஆசைகளைத் தூண்டுவதுமாகிய கொடிய ஆணவ இருள் கொண்டவர்களுடன் கூடி வருத்தம் அடைந்த குற்றமானது என்னை விட்டு விலகவும், பேரின்ப வீட்டை அடியேன் காணும்படியாகவும் அருள்புரிவீராக.

## விரிவுரை

**குருதி புலாலென்பு ........பொதிகாயக்குடிலிடை :—**

இந்த உடம்பு உதிரம், ஊன், எலும்பு, நரம்பு, மயிர், குடல், புழு முதலியவைகள் நிறைந்த குடிசை.

"குடரும் கொழுவும் குருதியும் என்புந்
தொடரு நரம்போடு தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமாம்" —நாலடியார்.

பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி
மீளும் குறும்பி வெளிப்படும் ஒருபொறி
சளியும் நீரும் தவழும் ஒருபொறி
உமிழ் நீர் கோழை ஒழுகும் ஒருபொறி

வளியும் மலமும் வழங்கும் ஒரு பொறி
சலமும் சீயும் சரியும் ஒரு வழி
உள்ளூறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டக முடிவிற் சுட் டெலும்பாகும்
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத்தேர்ந்து''—பட்டினத்தார்.

**மாலம்பி சீதம் :—**

மலம் என்ற சொல் மாலம் என நீண்டது என்றும் கொள்ளலாம். பிசிதம்—இறைச்சி. அது பிசீதம் என நீண்டது.

**குடிலிடை :—**

குடில்—குடிசை.

''குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலக்
குடில்'' —திருப்புகழ்

**ஓரைந்து வேடர் :—**

மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐந்து பொறிகளாகிய வேடர்கள்.

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை'' —சிவஞான போதம்.

''ஓரவொட்டார் ஒன்றை உன்னவொட்டார் மலரிட்டுனதாள்
சேரவொட்டார் ஐவர்'' —கந்தரலங்காரம்

**ஐம்புல அடவியில் ஓடுந்துராசை வஞ்சகர் :—**

ஐம்புலன்கள் : சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். இந்த ஐந்தும் புலன்கள்.

சுவையொளி ஊறோசை நாற்றம்என் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. —திருக்குறள்.

ஐம்பொறிகளாகிய வேடர்கள், ஐம்புலக் காட்டில் ஓடி உழன்று திரிவர். இவர்கள் துராசையுள்ளவர்கள்; வஞ்சகர்கள்.

**மாபஞ்ச பாதகம் :—**

கொலை, களவு, சூது, கள், குருநிந்தை என்பவை ஐம்பெரும் பாவங்கள்.

**சுருதி :—**

சுருதி—வேதம். இது எழுதாக் கிளவி. காதினுல் கேட்டுக் கேட்டு ஓதும் இயல்புடையது. அதனுல் சுருதியெனப் பெற்றது.

**புராணங்கள் :—**

புராதனம்—என்ற சொல் புராணம் என வந்தது. புராணம்—என்ற சொல்லுக்குப் பழமையென்பது பொருள்.

புராணம் வேதங்களில் உள்ள நுண்பொருள்களை விரித்துக் காட்டும் பூதக்கண்ணுடி போன்றது. அவை 18.

| | |
|---|---|
| சிவ புராணம் | 10 |
| விஷ்ணு புராணம் | 4 |
| பிரம புராணம் | 2 |
| அக்கினி புராணம் | 1 |
| சூரிய புராணம் | 1 |
| ஆக | 18 |

**ஆகமம் :—**

ஆகமம் 28. இது ஆப்தவாக்கியம் எனப்பட்டது.

**சரியை கிரியா :—**

ஆகமத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்கள் பேசப்படுகின்றன.

'நாலாரும் ஆகமத்தின் நூலாய ஞானமுத்தி''
—(நாவேறு) திருப்புகழ்

சரியை—புறவழிபாடு; கிரியை—அகப்புற வழிபாடு; யோகம்—அகவழிபாடு; ஞானம்—அறிவால் வழிபடுவது.

**அண்டர் பூஜை :—**

தேவ பூஜை. சிவ வழிபாட்டுக்கு அங்கமாக அமைந்தவை சூரிய பூஜை, அக்கினி பூஜை, திருமால் பூஜை முதலியன எனவுணர்க

**வந்தனை :—**

சரீரத்தால் வந்திப்பது. சரீர வழிபாடு.

**துதியொடு :—**

இது வாக்கின் வழிபாடு. திருமுறைகளை ஓதுதல்.

**நாடுந் தியானம் :—**

மனம் ஒருமுகமாக நின்று தியானித்தல். இது மன வழிபாடு.

**ஒன்றையும் முயலாதே :—**

மேலே கூறிய சரியை, கிரியை, பூஜை, வந்தனை, துதி, தியானம் இந்த ஆறில் ஒன்றையேனும் முயலுதல் வேண்டும். இங்ஙனம் முயலாது மாந்தர் வீணே அழிவர்.

**சுமடமதாய் :—**

சுமடம்—அறிவின்மை. அறிவிலியாய்த் திரிகின்றவர்.

**மால் கொளுந்திய :—**

மால் கொளும் திய. தீய என்ற சொல் திய என வந்ததாகவும் கொள்ளலாம். ஆசைகொளும் கொடியவர்.

**திமிரரொடே பந்தமாய் வருந்திய துரிசற :—**

திமிரம்—இருள்.

இது ஆன்மாவைப் பிணித்து வைத்துள்ள ஆணவமலம். இதுதான் ஆன்மாவை அணுவாக்குவது. சகல துன்பங்கட்கும் மூலமாய் இருப்பது. இந்த ஆணவ மலத்தால் கட்டுண்டவர்களுடன் நட்பு கொள்ளுவது மிகப் பெரிய குற்றம். துரிசு—குற்றம்.

**ஆனந்தவீடு கண்டிட :—**

ஆனந்த வீடு—பேரின்பத்தை நல்கும் முத்தி வீடு என்ப.

**தொண்டர்கள் உளமதில் நாளுங்குலாவி யின்புற வுறைவோனே :—**

நன்ருக முருகனைப் பரவித் துதி செய்யும் தொண்டர்களின் உள்ளக் கோயிலில் இறைவன் நாளும் அவர்கள் இன்புற உறைகின்ருன்.

> **"மருவு மடியார்கள் மனதில் விளையாடு**
> **மரகத மயூரப் பெருமாள் காண்"** —(திருமக) திருப்புகழ்.

**கருதிய ஆறங்கவேள்வியந்தணர் :—**

ஆறங்கம்;
நிருத்தம்—பதவிவரணம்
வியாகரணம்—பத இலக்கணம்
சிக்ஷை—பத உச்சாரண இலக்கணம்
சந்தஸ்—செய்யுளிலக்கணம்
ஜோதிடம்—கால விசேட இலக்கணம்
கற்பம்—கிரியா பிரயோக இலக்கணம்

இந்த ஆறு அங்கங்களும் வேத புருஷனுக்கு முறையே காது, வாய், நாசி, கால், கண், கை போன்றவை.

ஸ்ரீரங்கத்தில் உள்ள அந்தணர்கள் வேதாங்கங்களிலும் வேள்வி புரிவதிலும் வல்லவர்கள்.

**அரிகரி கோவிந்த கேசவ என்றிரு கழல்தொழு சீரங்கராஜன் :—**

கோவிந்தன்—இந்திரியங்களால் அறியப்படாதவன்.

அந்தணர்கள் ஹரி ஹரி கோவிந்த கேசவ என்று கூறித் துதி செய்கின்ருர்கள். அப்படித் துதிக்கப்பெற்றவர் ஸ்ரீரங்க மன்னர்.

**கமலனு மாகண்டலாதி யண்டரு மெமதுபிரானென்று தாள்வணங்கிய கரிவனம்வாழ் சம்புநாதர் :—**

பிரமன் இந்திரன் முதலியோர் திருவானைக்காவில் சிவபெருமானைப் பூசித்தார்கள். திருவானைக்கா தலபுராணத்தில் காண்க.

கருத்துரை

திருவானைக்காவிலுறை சிவகுமாரா! ஆனந்த வீடு காண அருள் செய்.

முருகா

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

72—ஆம் பக்கத் தொடர்ச்சி

### வைதவனைப் பொறுத்து வாழ்த்தவேண்டும்

தருமர், "பிதாமகரே! சாந்தமும் அறிவும் படைத்தவன் சபையில் ஒரு மூடன் தன்னை நிந்திப்பானாயின் என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டார்.

பீஷ்மர், "அறிவுள்ளவன் அற்பனுடைய நிந்தனையைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். அவ்வாறு பொறுத்தவன் மிகுந்த பயனை யடைகின்றான். நிந்தித்தவனுடைய புண்ணியத்தை அடைகின்றான். பொறுத்தவனுடைய பாவத்தை வைதவன் அடைகின்றான். ஆதலால் தன்னை நிந்தித்தால் சினமடையக் கூடாது. பாவம் தொலைகின்றது. புண்ணியமும் கிடைக்கின்றது. நிந்தித்தவன் "இதோ இவனை நிந்தித்தேன். செத்த பாம்புபோல் இருக்கின்றான்" என்று தன்னைத்தானே கொண்டாடிக் கொள்வான். காட்டில் கத்துகின்ற காகம்போல் அவன் கத்துவான். ஆனால் அநியாயமாகப் பிறரை நிந்திக்கின்றவன் புண்ணியத்தையிழந்து, பொறுத்தவனுடைய பாவத்தையும் மூட்டை கட்டிக் கொள்ளுகின்றான். ஆகவே நிந்திக்கின்றவனிடம் அறிஞன் வார்த்தை கொடுக்கக் கூடாது.

நேரில் புகழ்ந்து பேசி, மறைவில் குற்றத்தைப் பேசுகின்றவன் நாய்ப்பிறப்பை யடைகின்றான். அவன் புண்ணியங்கள் அழிந்து நாசமடைவான். பொறுத்தவர் பூமியாள்வர்.

தருமர் "பிதாமகரே! அமிர்தம் போன்ற இனிய அறவுரைகளை எமக்குக் கூறினீர். இப்படிச் சொல்ல வல்லார் உம்மையன்றி வேறு யாருளர். விதுரர் இப்படி எமக்கு உரைக்கத்தக்கவர். அரசன் துணையின்றி அரசு செய்ய முடியாது. எத்தகையோரைத் துணை கொள்ள வேண்டும்?" என்று கேட்டார்.

பீஷ்மர், "ஞானமும் விஞ்ஞானமும் உணர்ந்த நற்குலத்தில் பிறந்தவர்களைத் துணையாகக் கொள்ள வேண்டும்; வருங்காரியத்தை யறிந்தவர்களும், ஆசையில்லாதவர்களும், பெருங் குணமுள்ளவர்களுமான அமைச்சர்கள் அமைய வேண்டும். நம்பிக்கையுள்ளவர்கள் கருவூலத்தைக் காக்கவேண்டும்" என்றார்.

தருமர், "பெருமானே! அரசனுக்கு நற்குலத்தில் பிறந்தவர் கிடைக்காதபோது ஈழான குலத்தில் பிறந்தவர்களை துணையாகக் கொள்ளலாமா?" என்று கேட்டார். பீஷ்மர், "இதுபற்றி ஒரு கதை கூறுகின்றேன் கேள். இந்தக் கதை நான் பரசுராமரிடம் படித்தபோது பரசுராமரிடம் முனிவர்கள் கூறக் கேட்டது.

## நாயின் கதை

ஒரு கானகத்தில் தூய ஒழுக்கமும், பெரிய நியமமும் படைத்த முனிவர் ஒருவர் தவம் புரிந்து கொண்டிருந்தார். அவ்வனத்தில் வாழும் விலங்குகள் அவரிடம் தாயிடம் வரும் சேய்களைப்போல் வந்து அன்பு செய்யும். சிங்கம், புலி, கரடி, கண்ட பேரண்டம், பாம்பு மற்று முள்ள கொடிய விலங்குகள் அவரிடம் வந்து சாந்தமாக நிற்கும். அவர் அவ்விலங்குகளைக் கண்டு கருணையுடன் "சுகமா?" என்று கேட்பார். அவைகள் சுகம் என்று தலைகளை அசைக்கும். மெலிந்த நாய் ஒன்று அவர் அருகில் எப்போதும் படுத்திருந்தது. அவர் அதன் முதுகைத் தடவிக் கொடுத்து ஆதரவுடன் அன்பு செய்வார்.

ஒருநாள் ஒரு கொடிய சிறத்தைப் புலி இந்த நாயைக் கொன்று தின்னும் பொருட்டு உறுமிக் கொண்டு ஓடிவந்தது. வாயைப் பிளந்து கொண்டு காலாந்தகனைப் போல் வரும் புலியைக் கண்டு கிலியை யடைந்த மெலிந்த நாய் வாலை இரு கால்களுக்குப் பின் வைத்துக் கொண்டு அச்சத்தால் நடுநடுங்கி முனிவரைத் தஞ்சம் புகுந்தது கருணையே வடிவான முனிவர் "நாயே! நடுங்காதே" என்று கூறி தன் தவவலிமையால் நாயைப் புலியாகுமாறு செய்துவிட்டார். நாய் புலியாயிற்று. வந்த புலியை இந்த புலி விரட்டிவிட்டது. முனிவரின் கருணையால் புலியாகவே பெருமையுடன் வனத்தில் உலாவி மகிழ்ந்தது.

மற்றொரு நாள் பெரிய வேங்கை இப்புலியைக் கொல்ல விரைந்து வந்தது. சிறுத்தைப் புலி முனிவரிடம் ஓடிவந்து சரணடைந்தது. முனிவர் அளவற்ற கருணையால் அதை வேங்கையாக மாற்றி விட்டார். இந்த வேங்கை வந்த வேங்கையை விரட்டியோட்டி விட்டது. பிறகு வேங்கையாகவே வனமெங்கும் உலாவி நல்ல இறைச்சிகளைத் தின்று கொண்டு மகிழ்ச்சியில் திளைத்தது.

இன்னொரு சமயம் மதயானை யொன்று வஜ்ரம் போன்ற இரு தந்தங்களுடன் வேங்கையைக் கொல்ல ஓடிவந்தது. வேங்கை தவ முனிவரிடம் தஞ்சம் புகுந்தது. அருளாளரான அவர் வேங்கைக்கு மதயானையின் வடிவை வழங்கினர். இந்த யானையைக் கண்டு அந்த யானை அடங்கி மடங்கிப் பின்வாங்கிச் சென்றுவிட்டது. பிறகு யானை யாகவே காடெங்கும் உலாவிக் களிப்புற்றது.

வேறொரு சமயம், யானைகட்கு இயமன் போன்ற விலங்கரசு சிம்மம் இதைக் கொல்ல வந்தது. யானை பூனைபோல் நடுங்கி ஒடுங்கி முனிவரிடம் வந்து நின்றது. முனிவர் அதைச் சிங்கமாகச் செய்து விட்டார். சிங்கத்தைக் கண்ட அந்த சிங்கம் அசிங்கமாக அஞ்சி யோடிவிட்டது. அதுமுதல் அது சிங்கமாகவே எங்கும் உலாவி மற்ற விலங்குகளைக் கொன்று தின்று பெருமிதத்துடன் வாழ்ந்தது.

ஒருநாள் எட்டுக் கால்களையுடையதும் சிங்கங்களை வதைக்கக் கூடிய ஆற்றலுடையதுமாகிய சரபம் வந்தது. சிங்கம் பங்கப்பட்டு முனிவரிடம் ஓடி முறையிட்டது. தயாமூர்த்தியான அவர் அதைச் சரபமாக்கிவிட்டார். சரபம் ஆன அது வந்த சரபத்தை விரட்டி விட்டது. சரபம் என்ற உயர்ந்த பதவி பெற்ற அது அஞ்சா நெஞ் சுடன் உலாவி உவகையுற்றது. எல்லா விலங்குகளும் இந்தச் சரபத் தைக் கண்டு அஞ்சி ஓடி ஒளிந்தன. இதற்கு மேற்பட்ட பதவி வேறு இல்லை.

சரபம் தனியேயிருந்து சிந்திக்கலாயிற்று. இப்போது நமக்கு சரபம் என்ற பெரும் பதவி கிடைத்துளது. இது நிலைத்திருக்க வேண்டும். முனிவர் பெருங்கருணையுள்ளவர் நம்மைப்போல் சிறிய பிராணிகள் தஞ்சம் புகுந்தால் அவைகளுக்கும் இந்த சரப மாகும் பதவியைத் தரக்கூடும். நம்மையும் ஒருவேளை இப்பதவியி லிருந்து விலக்கக் கூடும். ஆதலாம் நாம் இம்முனிவரைக் கொன்று தின்றுவிட்டால் இப்பதவி நிலைத்து நிற்கும்'' என்று எண்ணியது. முனிவர் கண்மூடி தவம் புரியும்போது அவரைக் கொல்லும்பொருட்டு பின்புறம் ஓடிவந்தது. ஞானக்கண்ணும் தவவலிமையும் உடைய முனி வர் பெருமான் ''வா நாயே'' என்று அழைத்தார். அது பழைய நாய் வடிவம் பெற்று நின்றது. ''நாயே! அக்கினிப் பிரமன் என்ற பேருள்ள நான் பிருகு குலத்தில் உதித்தவன். மூன்று உலகங்களை ஒருகணத்தில் எரிக்குந் தவம் உடையவன். கருணையினால் நாயாகிய உன்னைப் படிப் படியாக உயர்த்தினேன். நன்றியில்லாத நீ என்னையே கொல்ல முயன்றனை. உன்மீது பிழையில்லை. இழிகுலத்தோனாகிய உன்னை உயர்த்தியது என் பிழை. கீழ்க்குலத்தோன் உயர்பதம் பெற்றால் எப்படிப் பெருந்தன்மையுடன் வாழ்வான்? குலத்தளவே யாகுங் குணம்'' என்றார். நாய் நாணிச் சென்றது. ஆதலால் தரும! நற் குலத்தவனை நல்ல பதவியில் வைக்கவேண்டும். காக்கையும் நாயும் பூனையும் பாம்பும் கெட்ட குலத்தவனும் ஒன்றுதான். சீலம் தூய்மை நேர்மை அறிவு கல்வி நடை குலம் அடக்கம் கருணை பெருமை முதலிய நல்ல பண்புள்ளவர்களை மந்திரிகளாகவும் பணியாளராகவும் நியமிக்க வேண்டும்.

பாவத்தைச் செய்கின்ற பிராம்மணன் தாழ்ந்தவன். அவனை ஒதுக்க வேண்டும். புண்ணியத்தைச் செய்கின்றவன் எக்குலத்தினனு யினும் அவனுடன் சேரவேண்டும்.

ஆதலால் உத்தமர்களுடன் உறவுகொண்டவனிடம் பூமி வெ நாட்கள் நிலைத்து நிற்கும்.

சரபம் சரப நிலையிலும், சிங்கம் சிங்கத் தானத்திலும் இருக்க வேண்டும். அதுபடி வேலைக்காரர்களை அவரவர்கள் தகுதியறிந்து அந்தந்த இடத்தில் அமர்த்த வேண்டும். குணத்தை விரும்பும் அரசன் நீசர்களையும் அறிவற்றவர்களையும் தீயகுலத்தில் பிறந்தவர்களையும் தன் அருகில் வைத்துக்கொள்ளக் கூடாது. சாதுக்களையும் நற்குலத்தில் உதித்தவர்களையும் பெருந்தன்மையுள்ளவர்களையும் தன் அருகில் வைத்துக்கொள்ள வேண்டும். சிங்கத்தின் அருகில் சிங்கமே பரிவாரமாக இருக்கவேண்டும். நாயிருந்தால் நற்பயன் விளையாது. அம்பு போல் திரும்பாமல் போகின்ற உத்தம வீரனை அரசன் ஆதரிக்க வேண்டும். தனமும் தான்யமும் பெருகுமாறு செய்யவேண்டும். அவைகளைப் பெருகச் செய்யும் உத்தமர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும்''

## மன்னன் மயில்போல் வாழவேண்டும்

மனிதரிற் சிறந்தவனே! மன்னவன் மயிலைப்போல் இருக்க வேண்டும். மயில் பல வண்ணங்களையுடைய தோகையை எவ்விதம் தரிக்கின்றதோ அவ்விதம் அரசன் பலவித வடிவங்களைத் தரிக்க வேண்டும். வரி வசூலிக்கின்றபோது கடுமையாகவும், நீதி செலுத்தும்போது நடுநிலைமையாகவும், பகைவரிடம் பயங்கரமாவும், அன்பர்களிடம் குளிர்ச்சியாகவும் காட்சி தரவேண்டும்.

மயில் சரத் காலத்தில் ஒலிக்காமல் இருப்பதுபோல், அரசன் மந்திராலோசனையை வெளிவிடாமல் காக்கவேண்டும். மயில் இனிய குரலும், அழகிய சாயலும் சமர்த்தும் கொண்டிருப்பதுபோல், அரசன் இன்சொற்களும், தோற்றமும், சாத்திரங்களில் சமர்த்தும் உடையவனாக இருக்க வேண்டும். மயில் நீரருவிகளில் நாட்டமுள்ளதாயிருப்பதுபோல், அரசன் வரவுசெலவுகளில் எச்சரிக்கையுள்ளவனாக இருக்கவேண்டும். மயில் மலையிலுள்ள மழைநீரை அடுப்பதுபோல் அரசன் ஆன்றோரை யடுத்திருக்கவேண்டும். மயில் தன் தலையிலுள்ள சிகையை எப்போதும் தூக்கி வைத்திருப்பது போல் அரசன் தருமக் கொடிகட்டி தரும குணசீலனா யிருக்கவேண்டும்.

மயில் தன்னைப் பாதுகாத்துக்கொண்டு, பாம்பு முதலியவற்றை அடிக்க எப்போதும் எச்சரிக்கையாக இருப்பது போல், அரசன் ஆசா

ரத்திலே இருந்துகொண்டு தண்ட நீதியில் கவனக் குறைவின்றி நிற்க வேண்டும். மயில் தான் இருக்கின்ற மரத்திலிருந்து அதிகச் செழுமை யுள்ள மற்றொரு மரத்துக்குச் செல்வதுபோல், அரசன் உலகிலுள்ள வரவுசெலவைக் கண்டு, வரவு அதிகமும் செலவு குறைவுமாகவுள்ள காரியங்களில் செல்ல வேண்டும். மயில் தன் தோற்றத்தினலேயே காக்கை முதலியவற்றின் குறை தோன்றும்படி இருத்தல்போல், அரசன் தன் நேர்மையினலேயே பகைவருடைய குற்றங்கள் வெளி யாகும்படி இருத்தல் வேண்டும். வேட்டை முதலிய காரணங்களைக் கொண்டு வெளியில் உலாவிக் கொண்டு பகைவரின் பட்சங்களை அழிக்க வேண்டும். மயில் நல்ல—உயர்ந்த செழிப்புள்ள மலைகளை அடுப்பதுபோல், அரசன் தன்னிலும் உயர்ந்த அரசர்களை அருக்க வேண்டும். மயில் களைத்த காலத்தில் நிழலை அடுப்பதுபோல், அரசன் இளைத்த காலத்தில் ஞாநியை அடுக்க வேண்டும். மயில் வேனிற் காலத்தில் மரத்தில் மறைந்து ஒன்றுவதுபோல், அரசன் இரகசியமாக இரட்சகனை அடையவேண்டும். மயில் மழைக் காலத்தில் மகிழ்வது போல், அரசன் இரவில் தனிமையான இடத்தில் மகிழவேண்டும். மயில் தன்னைப் பிடிக்க அமைத்த வலைகளை விலக்கிக் கொள்வது போல், அரசன் சாரர்களால் உண்மையை உணர்ந்து தனக்கு வரும் இடர்களை விலக்கிக் கொள்ளவேண்டும். மயில் நஞ்சும் கோணலு முடைய பாம்புகளைக் கொல்லுவதுபோல் அரசன் கோபமும் கோண லான நடையுமுள்ள பகைவர்களைக் கொல்ல வேண்டும். மயில் புழு முதலியவற்றை வெறுக்காதிருப்பதுபோல் தாழ்ந்தவர்களை வெறுக் காமல் இருக்க வேண்டும். மயில் உறுதியான சிறகுகளைக் கொண் டிருப்பதுபோல், அரசன் உறுதியுள்ள அமைச்சன் முதலியவர்களை நிலைத்திருக்கச் செய்ய வேண்டும். மயில் தன் சிறகுகளை தன் விருப்பப் படி விரிப்பதுபோல், அரசன் தன் இனத்தாரை வளரச் செய்ய வேண்டும்.

எனவே இவ்வாறு அரசன்* மயிலின் நடையை அனுசரிக்க வேண்டும்.

(தொடரும்)

* இதனல் அரசனுக்கு மயிலாசனமும் சிறப்பாக அமைந்துளது.

# கற்பு

## செங்கம்மா

வடலூருக்கு வடமேற்கில் வேலுடையான்பட்டு என்று ஒரு முருகனுடைய திருத்தலம் உண்டு. அது சிற்றூர். சிறு ஓடையும் அழகிய குளிர்ந்த சோலைகளும் சூழ்ந்து அமைதி நிலவும் அந்தவூரில் குமாரசாமிப் பிள்ளை யென்பவர் சிறந்த முருக பக்தர். அவருக்கு ஐம்பது ஏக்கர் முந்திரித் தோட்டம் உண்டு. அதில் நல்ல வருவா யுண்டு. தரும குணசீலர்.

''தேடிய மாடுநீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய ஈசன் அன்பர்க் காவன ஆகும் என்று
நாடிய மனத்தினேடு நாயன்மார் அணைந்தபோது
கூடிய மகிழ்ச்சிபொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்''

என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கின்படி, அடியார்கள் வந்தால் அகமும் முகமும் மலர்ந்து, இனிது வரவேற்று, வணங்கி வழிபட்டு, அன்னமும் சொன்னமும் ஆடையும் வழங்கி, செல்வத்தின் பயனை நுகர்ந்து வந்தார்.

இத்தகைய வித்தகருக்கு மனைவியும் வாய்த்திருந்தாள். ''கொண் டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி'' என்ற அறநூல் வாக்கின்படி கணவருடைய கருத்தறிந்து, குறிப்பறிந்து வாழ்ந்தாள்.

இந்த இருவரும் புரிந்த தவத்தின் பயனாக அவர்கட்கு ஒரு பெண் மகவு பிறந்தது. செங்கம் என்று பேர் சூட்டினார்கள்.

செங்கம் மழலை மொழியால் தாய் தந்தையரை மகிழ்வித்தாள். தளர்நடையிட்டடாள். வளர்பிறை மதிபோல் வளர்ந்தாள்.

குமாரசாமிப் பிள்ளை வேலுடையான்பட்டு முருகன் கோயிலுக்கு அடிக்கடி மகளை அழைத்துக்கொண்டு போவார். அதனால் அவளுக்கு முருகன் திருவடியில் பக்தி மேலிட்டது.

ஒருநாள் செங்கம் தன் தந்தையுடன் முருகன் கோயிலுக்குச் சென்றாள். அன்று கார்த்திகை. முருகப் பெருமானுக்குச் சிறப்பான அபிஷேகம் அலங்காரம் செய்தார்கள். முருகனுக்குத் திருநீற்று அபிஷேகம் புரிந்து வேல் சாத்தி ஆராதனை செய்தபோது, முருகன் நேரே பேசுகின்றாற்போல் காட்சியளித்தார். அடியவர்கள் ' ஹரஹர முருகா! சிவசிவ முருகா! வேல்வேல் முருகா! வெற்றிவேல் முருகா!''

என்று பெருங்குரலில் முழக்கஞ் செய்தார்கள். பல அடியார்களின் கண்களில் அன்புக்கண்ணீர் சிந்தியது.

"ஆளுடையான் போற்றும் அறுமுகவா! அன்புடைய
வேலுடையான் பட்டுறையும் வித்தகனே—தோலுடையார்
பித்தற் குலப்பித்த பிள்ளைப் பெருமானே
சித்தத் திருக்கிரியச் செய்"

என்று ஒரு அன்பர் பாடிப் பரவினார்.

செங்கம் தன் தந்தையைப் பார்த்து, "அப்பா! முருகனுக்கு இந்த வேல் ஏது?"

"அம்மா! இந்த வேலை முருகருடைய அப்பா பரமசிவங் கொடுத்தார்!"

"அப்பா! பரமசிவர் வேலை ஏன் கொடுத்தார்?"

"அம்மா! சூரசம்மாரம் செய்வதற்காகக் கொடுத்தார்."

"சூரனை ஏன் சம்மாரஞ் செய்யவேணும்?"

"அவன் தேவர்கட்குப் பெருங்கொடுமை செய்தான். அதனால் அவனைக் கொல்ல வேண்டி சிவபெருமான் முருகனுக்கு வேல் தந்தார்."

"அப்பா! அந்த சூரபன்மன் எந்த வூர்?"

"வீரமகேந்திரபுரி."

"அந்த வூர் எங்கே யிருக்கின்றது?"

"அம்மா! வீரமகேந்திரபுரி தென்கடலில் இருந்தது."

"அப்பா! இப்போ அந்த சூரன் இருக்கின்றானா?"

"முருகர் அவனை வேலினால் சம்மாரஞ் செய்துவிட்டார்."

"அப்படியானால் இப்போது முருகர் ஏன் இன்னும் வேலைக் கையில் வைத்துக் கொண்டிருக்கின்றார்?"

"அம்மா! வேல் என்பது ஞானம். தன்னை வணங்கும் அடியார்கட்கு ஞானத்தைத் தரும் பொருட்டு முருகர் வேலை வைத்துக் கொண்டிருக்கின்றார். குழந்தாய்! வேலை வணங்குவது நமக்கு வேலை. வேலை வணங்கியவரைக் காப்பது வேலவன் வேல். ஆதலால் நாம் எப்போதும் தப்பாது வேலையும் மயிலையும் தொழுதல் வேண்டும்."

இப்படி அடுக்கடுக்காக மகள் கேட்குங் கேள்விகட்குப் பதில் சொல்வதே தந்தையின் வேலையாக அமைந்தது.

செங்கம் கல்வி பயின்றாள். அவளுக்குப் பாட்டுப் பாடுவதில் அதிக வேட்கை, ஏதாவது பாடிக் கொண்டே யிருப்பாள்.

தகப்பனாரிடம் கந்தரநுபூதியைக் கேட்டு எழுதிப் பாடஞ் செய்து கொண்டாள். அதை இனிய குரலில் பாடுவாள்.

செங்கம்மா தங்கம்மாவாக வளர்ந்து மங்கைப் பருவமடைந்தாள். பொதுநிறமாக இருப்பினும் கண்ணும் மூக்கும் களையாக இருந்தன. அவள் முகத்தில் ஒரு கவர்ச்சி யிருந்தது.

குறிஞ்சிப்பாடியில் ஆசிரியர் வேலை பார்க்கும் சிந்தாமணி என்றவரனுக்கு அவளைத் திருமணஞ் செய்து கொடுப்பதென்று குமாரசாமிப் பிள்ளை நிச்சயித்தார்.

உற்றார் உறவினர் நண்பர்கட்கு திருமணவோலை யனுப்பினார். மேளதாளத்துடன் வரவேற்புச் செய்தார். மறுநாள் மேளதாளம் முழங்கியது. சிந்தாமணி செங்கம்மாள் கழுத்தில் திருப்பூட்டினான். பெரியோர்கள் வாழ்த்தினார்கள். விருந்து உபசாரம் நடந்தது,

அன்று பகல் பெருமழை பெய்தது. கல்யாண வீட்டின் வாசலில் தண்ணீர் ஏளம்போல் தேங்கியது. ஜலதாரை அடைபட்டிருந்ததனால் தண்ணீர் வெளியே போகவில்லை. ஒருவன் ஒரு தடியால் நீர்த்தாரையைக் குடைந்தான். மாப்பிள்ளை சும்மாவிருக்கக் கூடாதா? விதி பிடர்பிடித்து உந்தியது. மாப்பிள்ளை ஜலதாரைக்குள் கையைக் கொடுத்துக் குடைந்தான். நறுக்கென்று கையில் கடித்தது 'ஓ' என்று அலறினான். ஜலதாரைக்குள் இருந்த நீண்ட நாகம் வெளிப்பட்டு படம் எடுத்து ஆடி ஓடி மறைந்தது. மணமகன் பிணமகன் ஆனான். மணப்பறை பிணப்பறையாயிற்று. மங்கல ஒலிபோய் அழுகை ஒலியாயிற்று.

செங்கம்மாள் புழுவாய்த் துடித்து அழுதாள். மகளுக்கு நேர்ந்த ஈடுசெய்ய முடியாத துயரத்தைக் கண்டு தாய் தந்தையர் 'கோ' என்று கதறி அழுது புலம்பினார்கள்.

குமாரசாமிப் பிள்ளைக்குத் தலையில் இடிவிழுந்தது போலாயிற்று பயித்தியம் பிடித்தவர் போலானார். "இனி எனக்கு என்ன வாழ்வு. முருகா இப்படியும் என்னைச் சோதிக்கலாமா? பாழும் பாம்பு என்னைக் கடிக்கக்கூடாதா? என் மகள் கரந்தீண்டிய மருமகனையா அரவந் தீண்டுவது? அந்தோ! என் ஏழந்தை ஒருநாள் கூடக் கணவனுடன் மகிழ்ச்சியாக வாழவில்லையே! வள்ளிநாயகி! உன் கணவனுடன் நீ மட்டும் சுகமாக வாழ்கின்றனையே! என் செல்வப் புதல்வி, உலகம் அறியாத இளஞ்சிறுமியின் கதி அதோ கதியாகி விட்டதே" என்று பலவாறு கூறிக் கதறியழுதார்.

செங்கம்மா கைம்பெண் விரதம் பூண்டு தவவொழுக்கத்தில் நின்றாள். மகளைக் காணுந்தொறும் காணுந்தொறும் தந்தையார் கண் கலங்கினார்.

இப்படித் துன்பகரமாகச் சில ஆண்டுகள் உருண்டன. ஒருநாள் செங்கம்மா தன் பிதாவை நோக்கி. "அப்பா! பக்கத்தில் வடலூரில்

யாரோ ஒரு மகான் வந்திருக்கின்றாராம். அவர் பரமஞானி யென்றும், கருணைக்கடல் என்றும் கூறுகின்றார்கள். நான் அவரைத் தரிசிக்க விரும்புகின்றேன். என்னை அழைத்துப் போங்கள்'' என்றாள்.

குமாரசாமிப் பிள்ளை ''மகளே! அவர் இராமலிங்க சுவாமிகள். திருவருட்பா பாடுகின்றார். திருவருட் பிரகாசர் என்று அவரைக் கொண்டாடுகின்றார்கள். அவசியம் அவரைத் தெரிசிக்கவேண்டும் நாளை வியாழக்கிழமை. குருவாரம் கோடிபெறும். நாளைபோவோம்'' என்றார்.

மறுநாள் காலை மகளுடன் வடலூர் சென்றார்.

தருமசாலையிலே வள்ளல் பெருமானைக் கண்டு வணங்கினர். செங்கம்மா அடக்கமே ஒரு உருவாகச் சென்று வாடிய முகத்துடன் இராமலிங்க அடிகளாரை அஞ்சலி செய்தாள். வள்ளலார் இருவரையும் வாழ்த்தியருளினர். வெண்பட்டுப் புடவையுடுத்து, மஞ்சள் குங்குமம் இன்றி விதந்துவாக இருந்த அழகிய பெண்மணியைப் பார்த்த வள்ளலார் திருமுகத்தில் கருணையால் இரக்கத்தால் கண் துளித்தது.

அப்பெருமானுடைய திருக்கோலத்தை செங்கம்மா கூர்ந்து நோக்கினள். பொன்மேனி, பரந்து விரிந்த நெற்றி. நெற்றியில் வெண்திருநீறு. கருணை பொழியுங் கண்கள். தும்பை மலர்போன்ற தூய வெண்ணிற ஆடை. முக்காடிட்ட மூவுலகம் தொழத்தக்க தவக் கோலம். ஞானவொளி வீசும் திருமுகம். அன்பும் அருளும் நிறைந்த திருவுள்ளம். தாமரை மலர்போன்ற கரதலம். மென்மையான திருவடி. ஆகிய அருள் திருமேனியைப் பார்த்து செங்கம்மா அமைதியும் பக்தியும் கொண்டாள்.

அன்று பகல் எல்லோருக்கும் வள்ளலார் உணவு படைத்து உண்பித்தார். ஏழை எளியவர்களை யெல்லாம் பசியாற்றினர். மாலை ''அம்பலத்தரசே அருமருந்தே! ஆனந்தத்தேனே அருள் விருந்தே' என்று பஜனை நடைபெற்றது.

இரவு 10 மணி. எல்லோருக்கும் உறக்கம் வந்தது. தனிமையாக இருந்த வள்ளலாருடைய மலரடியில் வீழ்ந்து செங்கம்மா அழுதாள். அவர் திருவடியைத் தொழுதாள். ''அண்ணலே! அருந்தவ மணியே! பெருங்கருணைப் பெருமானே! நான் கைநீண்டிய அன்றே என் கணவனர் அரவந்தீண்டி மாண்டார். தாங்கள் செத்தாரை எழுப்புவதாக கேள்வியுற்றேன். என் கணவனர் எழுவாரா?'' என்று தழுதழுத்த குரலில் கேட்டாள்.

வள்ளலார் ''குழந்தாய் வருந்தாதே. நான் என்ற அகந்தை செத்தார் பரகதிக்கு எழுவார்.

முதிர்தவ ராயினும் முனிவ ராயினும்
மதியின ராயினும் மன்ன ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்?

"அவ்வினைக் கிவ்வினை" என்று ஞானசம்பந்தர் அருளிச் செய்கின்றார். "பண்டைப் பழவினை விளைந்தால் மாற்றுவது யார்?" என்கின்றார் மாணிக்கவாசகர். இந்த உடம்பு முகந்து கொண்ட வினையை அவரவர் நுகர்ந்துதான் ஆகவேண்டும். நீ வருந்தாதே. உன் ஆன்மா ஈடேறுகின்ற நல்வழியைக் கடைப்பிடித்து ஒழுகுவாயாக" என்று அருளுரை கூறினர்.

செங்கம்மா "குருநாதா! நான் என்ன பாவஞ் செய்தேனோ? இப் பிறப்பில் ஒரு பாவமும் செய்யவில்லை இப்படியான ஒரு வஜ்ர இடி என் தலையில் விழுந்துவிட்டதே" என்றாள்.

வள்ளலார் சிறிது நேரம் கண்களை மூடிக்கொண்டு இருந்தார். செங்கம்மா அவருடைய திருமுகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் கழிந்தபின் வள்ளலார் கண்மலர் திறந்தார். "அம்மா! நீ முந்திய பிறப்பில் ஒரு விவசாயியின் புதல்வனாக இருந்தாய். அப்போது ஒரு பெண்ணை நீ காதலித்திருந்தாய். நீ காதலித்த கன்னிகையை வேறு ஒருவன் திருமணஞ் செய்து கொண்டான். அதனால் ஆத்திரமும் சீற்றமும் அடைந்த நீ திருமணத்தன்றே மணமகனை வஞ்சனையால் கொன்றுவிட்டாய். அவ்வினையால் நீ பெண்ணாகப் பிறந்து திருமணத்தன்று கணவனையிழந்தாய். முற்பிறப்பில் மற்றொரு பெண்ணின் வாழ்வைக் கெடுத்தாய். அவள் வாழ்நாள் முழுவதும் கணவனையிழந்து வாடி வருந்தினள். அத்தீவினையால் நீ இப்பிறப்பில் நாயகனை யிழந்து நலிகின்றனை. இதுதான் நியாயத் தீர்ப்பு. செய்த வினையை அவரவர்களே அனுபவித்து ஆகவேண்டும். செய்வான்; செய்வினை, வினைப்பயன்; வினைப்பயனைச் சேர்ப்பான் என்ற இந்த நான்கும் நமது சிவ சமயத்தில் சிறந்த கொள்கைகளாக விளங்குகின்றன. கருவேல் நட்டவர்கள் கருவேலைத்தானே பெற முடியும். கள்ளியை நட்டவன் சந்தனமரத்தைப் பெறமுடியாது தானே. ஆதலால் நீ கவலையை ஒழித்து, ஆன்மநாயகனாகிய இறைவனைத் தியானஞ் செய். வருந்துவதால் பயன் இல்லை. நான் கூறிய முற்பிறப்பின் தன்மையை நீ மற்றவரிடம் கூறவேண்டா. இது உன் பொருட்டு இப்போது இறையருளால் உணர்ந்து உரைத்தேன். ஆதலால் நீ உலக இன்பத்தைத் துறந்து, கணவனை மறந்து, தவ நெறியில் சிறந்து ஒழுகுவாயாக. இனி நீ போய் வரலாம்" என்று அருளிச் செய்தார்.

செங்கம்மா வள்ளலாருடைய அருள் உபதேசத்தால் பந்த பாசத்தை யறவே ஒழித்தாள். தன் பிதாவுடன் வேலுடையான் பட்டுக்குச் சென்று, திலகவதியாரைப்போல தவவொழுக்கத்தில் நின்று, பொறி புலன்களைவென்று முருகனடியை உள்ளத்தில் பதித்து, அவன் திருவடியைத் துதித்துக் கொண்டிருந்தாள்.

---

திருத்தணிகேசன் துணை

## ஒரு திருத்தம்

முருகவேள் பன்னிரு திருமுறை—ஐந்தாம் தொகுதி பக்கம் 300, பாடல் 1134:—

"புதல்வோரும்—
இன மொப்பித் திசையைச்சொற் பலகத்திட் டிழியப்பிற்
கிடையத்துக் கழும்விட்டிட் டவரேக."

இந்த அடிக்குச் சரியான பொருள்பின்வருமாறு: புதல்வோரும்—பிள்ளைகளும், இனம் ஒப்பித்து—தத்தமது உறவு முறையைச் சொல்லி (அப்பா, பெரியப்பா, சிற்றப்பா, முதலிய உறவு வகைகளைச் சொல்லி;) இசைய-பொருத்தமான, சொல் பல கத்திட்டு-பல சொற்களை பலமாகக் கூறி அழுது (பின்பு), இழி அப்பில் கிடைய—அப்பில் இழி கிடைய—நீரில் இறங்கி படிந்து (மூழ்கி) துக்கமும் விட்டிட்டு—துக்கத்தை விட்டு, அவரேக—செல்ல. இவ்வாறு மெய்யுரை இருக்க முறை பிறழ்ந்து உரை எழுதி உள்ளேன். உரையை மேற்கண்டவாறு திருத்திக் கொள்ள வேண்டுகிறேன்.

"நூல் உரை போதக ஆசிரியர் மூவரும்
முக்குண வசத்தால் முறை பிறழ்ந்து அறைவரே"

என ஈசான தேசிகர் கூறின கூற்றுக்கு இலக்காயினேன் என வருந்துகிறேன்: இவ்வடியின் கருத்தை "இத்தாரணிக்குள்" எனத் துவக்கும் பழநித் திருப்புகழில் "நீரிற் படிந்து விடு பாசத்து அகன்று" என வரும் அடியிலும் காணலாம். "நீரில் மூழ்கி நினைப்பொழிந்தார்களே" (திருமந்திரம் "ஊரெல்லாம்"—145) நீரிற் படிந்து விடு பாசம் பிணத்தை எரிய விட்டு சுடுகாட்டை விட்டகன்று நீரிற் குளித்தவுடன் பந்த பாசம் விலகுகின்றது—"நல்ல கிளை குளத்து நீரளவே"—க்ஷேத்திரத் திரு வெண்பா-14.

வ. சு. செங்கல்வராய பிள்ளை

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும். அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2,

---



---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

போன் : 83839

திருப்புகழமிர்தம் Regd. No. M. 3487

Registered with the Registrar of Newspapers for India under R. N. 1109/57.



Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodana Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5